பரிசீலனையில் இருக்கிறது என்று சொல்லும்போது அதில் சர்க்காருடைய முயற்சிக்கு குறைவு இல்லை. வெளி நாட்டு உதவி எவ்வளவு கிடக்கிறதோ அதைப் பொறுத்து இருக்கிறது சர்க்காருடைய முயற்சி. அதற்கு வெளி நாட்டிலிருந்து வரக்கூடிய உதவியைக் கொண்டுதான் நிறைவேற்ற முடியும். அது இல்லாமல் ஒன்றும் செய்வதற்கு இல்லை. முதலில் "டேனிஷ் கோவாப ரேஷன்" எங்களுக்கு உதவி செய்ய முன் வந்தார்கள். அப்பொழுது எல்லா திட்டங்களையும் செய்ய தயாராக இருந் தோம். பிறகு அவர்கள் பின் வாங்கி விட்டார்கள். அதனால் அவைகளை இப்பொழுது கொண்டு வர முடியவில்லை. அதனல் இப் பொழுது முடியும் என்று சொல்வதற்கு இல்லை.

*Oil-mongers' Association, Pazhampettai*

* 370 *Q.*—SRI M. P. SARATHI : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப் பாரா—

(அ) வட ஆற்காடு மாவட்டம், பழம்பேட்டை எண்ணெய் உற்பத்தியாளர் சங்கத்தில் சமீபத்தில் பூட்டை உடைத்துத் திருட்டு நடந்ததாக போலீசாரிடம் புகார் வந்ததா ?

(இ) போலீசாரின் புலன் விசாரனை எந்த நிலையில் உள்ளது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes, Sir. The complaint was made in March 1959.

(*b*) The case was treated as false, after a thorough investigation, and the person who gave the false complaint was appropriately punished by the competent courts.

SRI M. P. SARATHI : சார், போலீசார் விசாரணையில் அந்தப் புகார் செய்தவர்தான் அந்தக் குற்றத்தைச் செய்திருப்பதாகச் சொல்லி இருக்கிறார்களா ? அதன் பேரில் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதையேதான் நான் பதிலும் சொன்னேன். புகார் செய்தவரே பணத்தை எடுத்துக் கொண்டு விட்டு புகார் செய்திருக்கிறார் என்று தெரிய வந்தது. அதன்பேரில் அவர் மீது நடவடிக்கை எடுக்கப்பட்டு அந்த வகையில் அவருக்கு ஐம்பது ரூபாய் அபராதம் ; அதைக் கட்டத் தவறினல் ஆறு மாத சிறை தண்டனை என்று தண்டனை கொடுக்கப்பட்டிருக்கிறது.

*Adulteration*

* 371 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கூட்டுறவு சங்கங்கள் நடத்தும் உணவுப் பொருள் வர்த்தகத்தில் கலப்படமிருக்கிறதா எனப் பரிசீலனை செய்யப்படு கிறதா ?

18th February 1961]

(இ) அப்படியானல் அதன் விவரமென்ன ?

(உ) இந்த ஒழுங்கீனங்களைத் தவிர்த்து நேர்மையை நிலை நாட்ட அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறது ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) Yes, Sir.

(b) A statement[a] is placed on the table of the House.

(c) Under the provisions of the Prevention of Food Adulteration Act, 1954 (Central Act 37 of 1954), necessary action is being taken to prevent the manufacture and sale of any adulterated food including sale of foodstuffs by Co-operative societies.

SRI A. VEDARATHNAM : கூட்டுறவு சங்கங்களில் விற்கப் படுகின்ற பொருள்கள் மீது அக் மார்க் போட வேண்டுமென்று உத்தரவிட்டிருக்கிறார்களா ? கலப்படத்தைத் தடுப்பதற்கு எல்லா பொருள்களுக்கும் அக் மார்க் போட்டு அதன் பிறகு விற்பனை செய்ய வேண்டும் என்ற உத்தரவை அரசாங்கம் பிறப்பிக்க முன் வருமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : நெய் போன்ற சில பொருள்களுக்கும் அக் மார்க் போட்டு அதன் பிறகு விற்பனை கலப்படம் செய்யக்கூடிய பொருள்களுக்கு எல்லாம் போட வேண்டும் என்று இருக்கிறது. அப்படிப் போட்டால்தான் கலப் படம் செய்யக்கூடாது என்று இருப்பார்கள். அப்படிச் செய் வதற்கு வேண்டிய திட்டம் இருக்கிறது. அப்படிச் செய்தால் தான் கலப்படம் செய்வது கொஞ்சம் அடங்கி விடும்.

SRI A. A. RASHEED : Sir, is there any proposal to enhance the punishment to the offenders of the Food Adulteration Act?

THE HON. SRI M. A. MANICKAVELU : Even under the present circumstances, there is plenty of scope for enhanced punishment. It may be seen from the statement placed on the table of the House, a person was fined Rs. 1,000 and there is imprisonment also in some cases.

SRI K. R. VISWANATHAN : தலைவர் அவர்களே, சில பொருள்கள் உற்பத்தியாகும் இடத்திலேயே கலப்படம் செய்யப் படுவதால் அதை வாங்கும் சில்லரை வியாபாரிகள் அது தெரியாமல் வாங்குவதால் அவர்கள் குற்றவாளிகள் என்று கருதி அவர்களுக்கு தண்டனை கொடுக்கிறார்கள். சில்லரை வியாபாரிகள் குற்றம் செய்யாதவர்களாக இருந்தாலும் அவர்கள் குற்ற வாளிகள் என்று கருதி அவர்களை தண்டிக்கிறார்கள். ஆகவே சில்லரை வியாபாரிகளை தண்டிக்காமல் இருக்க அவர்களுக்கு விலக்கு அளிக்க சர்க்கார் முன் வருவார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அப்படிச் செய்தால் எல்லாரும் விலக்கு கேட்க முன் வருவார்கள். சில்லரை வியா பாரிகளும் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும் என்பதற்காகத்தான்

[a] Printed as Appendix II on pages 88–89 infra.

[18th February 1961

அப்படி போடப்பட்டிருக்கிறது. ஆகவே சில்லரை வியாபாரிகளும் பொருள்களை உற்பத்தியாகும் இடத்தில் வாங்கும்போது ஜாக்கிரதையாக இருக்கவேண்டும், அவைகளை பரிசீலனை செய்து பார்த்து வாங்க வேண்டும். அவைகளை செக் பண்ணி பார்த்து வாங்க வேண்டும்.

*Virudunagar*

* 372 *Q.*—SRI K. VINAYAKAM : Will the Hon. the Minister for Revenue be pleased to state whether there is any proposal to form a new district of Virudunagar from out of Madurai and Tirunelveli districts?

THE HON. SRI M. A. MANICKAVELU : No, Sir.

SRI K. VINAYAKAM : Sir, was any popular representation in the form of mahazar received by the Government in connexion with the formation of a new district known as Virudunagar from the residents, merchants and the neighbourhood of Virudunagar?

THE HON. SRI M. A. MANICKAVELU : Popular or not, I think there was some representation about this matter, not only about this district but also about other districts. The Government have examined this and wanted to do something in that direction. But later on it had been deferred and now we have appointed District Revenue Officers to relieve the work of the Collectors and we shall watch how it works and later on we shall look into it.

**SRI A. V. P. ASAITHAMBI :** இந்த மாதிரியான ஒரு கேள்வியை முன்பு ஒரு முறை கேட்டதற்கு அவைகள் எல்லாம் பரிசீலனையில் இருக்கிறது என்று கனம் அமைச்சர் அவர்கள் சொன்னார். இராமநாதபுரம் மாவட்ட தலைநகர் வேறு ஒரு இடத்தில் இருப்பதால் அந்த மாவட்ட மக்கள் ரொம்பவும் அவதிப் படுகிறார்கள். அது கனம் அமைச்சர் அவர்களுக்கு நன்கு தெரியும், அதைப்பற்றி கனம் அமைச்சருக்கும் ஏற்கனவே தெளிவு படுத்தியிருக்கிறது. மதுரை மாவட்டத்திலுள்ள சில பகுதிகளை எடுத்து திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள சில பகுதிகளையும் எடுத்து, எல்லாவற்றையும் சேர்த்து கிழ் இராமநாதபுரத்தை தனியாக அமைத்து வேறு மாவட்டமாகச் செய்து, அப்படி மதுரை மாவட்டத்திலுள்ள பகுதியிலுள்ள சிலவற்றை எடுத்துச் சேர்த்து விருதுநகர் மாவட்டம் என்று ஒரு தனி மாவட்டத்தை ஏற்படுத்தினால் நிர்வாகத்தில் கொஞ்சம் வசதி ஏற்படும் அல்லவா ?

**THE HON. SRI M. A. MANICKAVELU :** இதைப்பற்றி ஏற்கெனவே நான் பதிலளிக்கும்போது சொன்னேன் இது பரிசீலனையில் இருக்கிறது என்று. அப்பொழுது பரிசீலனையில்தான் இருந்தது. பிறகு அது ஒத்தி வைகப்பட்டிருக்கிறது. இப்பொழுது நான் சொன்னது புதியது. இன்றைக்கு ஒரு டிஸ்ட்ரிக்ட் ரெவினியூ ஆபீசரை நியமித்திருக்கிறோம்.